ஓம் தத்ஸத்.

பரப்ரஹ்மனே நம:





# வித்வத் விளக்கம்.

இயற்றியவர்:

**ஸ்வாமி சீதாலக்ஷிமி அம்மாள்,**

ஸ்ரீ லக்ஷிமிபதி ஆனந்தாஸ்ரமம்,

ஸ்ரீநகர் சஞ்சீவிமலை,

இராஜபாளையம்.

இராஜபாளையம்

**ஜெயராம் பிரஸில்**

அச்சிடப்பெற்றது.

**1962.**



2 0-5

பரப்ரஹ்மணே நம:
குருப்யோ நம:

# வித்வத் விளக்கம்.

ஆனை முகன் ஆறு முகன் அம்பிகை
பொன்னம்பலவன் ஞானகுரு வாணியை
உள் நாடு.

## குரு வணக்கம்

நாராயணம் பத்மபுவம் வஸிஷ்டம் சக்திஞ்ச
தத்புத்ர பராசரஞ்ச வியாஸம் ஸுகம் கௌடபதம்
மஹாந்தம் கோவிந்த யோகீந்த்ர மதாஸ்ய ஸிஷ்யம்
ஸ்ரீ சங்கராச்சார்ய மதாச்ய பத்ம ப்ரதஞ்ச
ஹஸ்தாமலகம் சசிஷ்யம் தம் தோடகம்
வார்த்திக்கார மன்யான் அஸ்மத் குருன்ஸந்ததம்
ஆநதோ அஸ்மி

## குரு வணக்கம்

ஏலாக மாதர் மணாளப்பே ரெம்மெழிற் குரு தந்தை
திருத்தாளை வணங்குவோமே.
நித்தன் நிற்குண நின்மல நீடுளி சித்தன்
ஏகன் அத்தன் அருளினன் தத்துவன் குரு
சரணம் போற்றி போற்றி.

ஓம் நமோ பிரஹ்மாதிப்யோ பிரஹ்ம வித்யா
சம்பிரதாய கர்த்ருப்யோ வம்ஸ ருஷிப்யோ
அஸ்மதாச்சார்ய பர்யந்தேப்யோ குருப்ய:

ஈஸ்வரத்வம், ஜீவத்வம், ஸர்வாத்மத்வம்

இவைகளை எவ்வித ஞானத்தால் அறிய முடியும், அவ்வித ஞானத்தை அடைய ஸாதனம் (காரணம்) உபாயம் என்ன ஞானத்தால் உண்டாகும் பலன்என்ன? ஸ்வர்க்கம் முதலிய பலன்போல புதிதாக உண்டாகிறதா! அல்லது இருப்பதே அறியாமையால் நம்மிடமில்லாமலிருப்பது போலிருந்து ஞானத்தால் அகப்படுகிறதா! ஜீவனும் ஈஸ்வரனும் ஒன்று என்றுஎப்படிசொல்லமுடியும். ஸர்வத்தையும் அறிந்தவனும் ஸர்வபொருளை உண்டாக்கினவனுமான ஈஸ்வரன் அல்பமான வஸ்துக்களை செய்கிறவனாயும் உள்ள ஜீவாத்மாவாக எப்படி இருக்கமுடியும்? விருத்தமான தர்மங்கள் ஒரே இடத்தில் இருக்காதல்லவா! இவ்விதம் கேள்விகளைக் கேட்கும் சிஷ்யனுக்கு குரு பதில் சொல்வதற்காக தக்ஷிணா மூர்த்தி ஸ்தோத்திரத்தை ஆரம்பிக்கிறார்.

விஸ்வம் தர்ப்பண த்ருஸ்யமான நகரீ
துல்யம் நிஜாந்தர்கதம்
பஸ்யந் ஆத்மனி, மாயயா பஹிரிவோத்
பூதம் யதா நித்ரயாயஸ் சாக்ஷாத் குருதே

ப்ரபோத சமயே. ஸ்வாத்மான மேவ
அத்வயம் தஸ்மை ஸ்ரீ குருமூர்த்யே
நம இதம ஸ்ரீ தக்ஷிணாமூர்த்யே.

## பதவுரை.

நித்ரயா - தூக்கத்தினால் (ஸ்வப்ன காலத்தில்) நிஜாந்தர்கதம் - தன்னுள்ளடங்கிய வாஸனையங்களாக விளங்கும் விஸ்வம் — உலகத்தை — பஹி: உத்பூதம்—வெளியில் இருப்பதுபோல பஸ்யந் பார்த்துக்கொண்டு — ப்ரபோத சமயே விழித்துக்கொண்ட சமயத்தில் அத்வயம் ஆத்மானம் - ஸ்வப்னத்தில் கண்ட உலக மற்றதன் ஸ்வரூபத்தை யதா சாக்ஷாத் குருதே—அனுபவிப்பதுபோல (ஜாகரண காலத்திலும்) தர்ப்பண திருஸ்யமான நகரீ துல்யம் - கண்ணாடியில் காணப்படும் பட்டணம் போன்றதாயும் நிஜாந்தர்கதம் ஆத்மா ஸ்வரூபத்தில் அடங்கியதாயும் உள்ள (ஆத்மாவில் கற்பிதமாயுள்ள) விஸ்வம் உலகத்தை ஆத்ம மாயயா (தன்னிடத்தில்) ஆத்மா ஸ்வரூபத்தில் இருக்கும் மாயையால். (ஆத்ம ஸ்வரூபத்தின் அறியாமையால்) பஹி: உத்பூதமிவ — ஆத்மாவைக் காட்டிலும் வேறாக வெளியிலிருப்பதுபோல பஸ்யன் - பார்த்துக்கொண்டு ய: —எவர் ப்ரபோத சமயே — ஆத்ம சாக்ஷாத்காரம் ஏற்படும்பொழுது

அத்வயம் - இரண்டாவது வஸ்து இல்லாத ... ஸ்வாத்மானம் ஏவ - தன் ஸ்வரூபத்தையே சாக்ஷா... குருதேவ் அனுபவிக்கிறாரோ தஸ்மை - அந்த ஸ்ரீ குருமூர்த்தியே தத்துவத்தை உபதேசிக்கும் குருஸ்வரூபமான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியே தெற்கு நோக்கியிருக்கிற தக்ஷிணாமூர்த்திக்கு இதம் நம: - இந்த நமஸ்காரம் உரியது.

இ— சா— தூக்கத்தினால் (ஸ்வப்னகாலத்தில்) தன்னுள்ளடங்கிய, வாஸனாமயங்களாக விளங்கும் உலகத்தை வெளியிலிருப்பதுபோல பார்த்துக்கொண்டு விழித்துக்கொண்ட சமயத்தில் ஸ்வப்னத்தில் கண்ட உலக மற்றதன் ஸ்வரூபத்தை அனுபவிப்பதுபோல் (ஜாகரண காலத்திலும்) கண்ணாடியில் காணப்படும் பட்டணம் போன்றதாயும், ஆத்மா ஸ்வரூபத்தில் அடங்கியதாயும் உள்ள (ஆத்மாவில் கல்பிதமாயுள்ள) உலகத்தை (தன்னிடத்தில்) ஆத்மஸ்வரூபத்தில் இருக்கும் மாயையால் (ஆத்மஸ்வரூபத்தின் அறியாமையால் ஆத்மாவை காட்டிலும் வேறாக வெளியில் இருப்பது போல பார்த்துகொண்டு எவர் ஆத்மா ஸாக்ஷாத்காரம் ஏற்படும் பொழுது இரண்டாவது வஸ்து இல்லாததான தன்ஸ்வரூபத்தையே அனுபவிக்கிறாரோ தத்துவத்தை உபதேசிக்கும் குரு ஸ்வரூபமான தெற்கு நோக்கியிருக்கிற தக்ஷிணாமூர்த்திக்கு இந்த நமஸ்காரம் உரியது

உள்ளேயிருக்கும்பொருள் வெளியிலிருப்பதாகத் தோன்றுவதற்கு நித்ரா திருஷ்டாந்தமும் உண்மையில் தன்னிடமில்லாத வஸ்து தன்னிடமிருப்பதாகத் தோன்றுவதற்கு உதாரணமாகக் கண்ணாடியில் தோனறும் நகர திருஷ்டாந்தம் சொல்லப்பட்டிருக்கிறது.

## பக்தி

மோக்ஷமடைவதற்கு ஏதுவாயுள்ள சாமக்கிரியை சாதனங்களில் பக்தியே மிகவும் சிரேஷ்டம். சுய ஆத்மா ஸ்வரூபத்தின் அனுசந்தானமே பக்தி என்று மகாத்மாக்கள் சொல்கின்றார்கள். அஞ்ஞான உறக்கத்தினின்று விழித்து எழுந்திருங்கள். சிரேஷ்டமானவர்களை அடைந்துபிரஹ்ம ஞானத்தை சம்பாதியுங்கள். ஏனெனில் அதை அறிந்து கொள்ளும் வழியானது வெகு கூரான கத்தியின் முனையில் நடப்பதுபோல. வெகு கடினமானது என்று சான்றோர்கள் சொல்கிறார்கள். இப்பிறப்பில் பிரஹ்மத்தை அறிந்து கொண்டால் பிறகு நிலையுண்டாகும். இப்பிறப்பில் அறியாவிட்டால் பெரும் நஷ்டமுண்டாகும். பூதங்களில் தோன்றும் பிரஹ்மத்தைக் காணும் தீரர்கள் இவ்வுலகத்தை விட்டு நித்திய பதவியை அடைகிறார்கள் கேனஉபநிஷத்.

ஜீவன்களுக்கு மனித ஜன்மம் கிடைப்பதே வெகு துர்லபம்.

அதில்வேதமோதும் வைதீக மார்க்கத்தில் நடத்தலும் அதனிலும் வித்வானுதலும் அதனிலும ஆத்ம அனுத்யா விசாரம் பிறத்தலும் அதனிலும் சுவானுபவ ஞானமடைதலும் மிக அருமை. அந்த ஞானத்தால் பிரஹ்மாகாரமாக இருக்கும மோக்ஷமானது அனந்தகோடி ஜன்மாந்திரங்களில் செய்த சுகிர்தங்களாலன்றி கிடையாது.

ஈஸ்வர அனுக்கிரக காரணமாய் அருமையான மனுஷத்வம், முமுக்ஷுத்வம் மகாத்மாக்களின் சங்கம் என்னும் மோக்ஷமடைய இதுவே ஏது.

எப்பொழுதும் வேதத்தை படித்து இதில் சொல்லப்பட்ட கருத்துக்களை நன்றாக விசாரணை செய்து அதன் மூலமாக கடவுளை பூஜைசெய்து, மேலும் ஆசாபாசத்திலே மனதைச் செலுத்தாமல பாபச் செயல்களை விட்டுவிட்டு சம்சார சுகத்தின் குணங் குற்றங்களை விசாரணை செய்து ஆத்ம லாபத்தை அடைய பிரயத்தனம் செய்யவேண்டும்.

மேலும் சற்ஜன சங்கத்தில் இருந்து திடமான பக்தியுடன் ஆராதனை செய்யவேண்டும். அதற்குப்பிறகு, எது

இந்திரியங்களை சாந்தப்படுத்துகிறதோ அதுவே ஞானம். எது உபநிஷத்துக்களின் அர்த்தத்தை தெளிவாக்குகிறதோ அதுவே ஞேயம்.

எவருடைய சமஸ்த காரியங்களும் பரமார்த்த திருஷ்டியாயிருக்கிறதோ அவரே பூலோகத்தில் பாராட்டத்தக்கவர். மற்றவர்கள் என்ன செய்வதென்று திகைக்கின்றார்கள். விஷய சமூகங்கள் மதமோகராக துவேஷ முதலிய சத்துருக்கர்களை ஜெயித்து, யோக சாம்ராஜ்யத்தைப் பெற்று, அமிர்த ஞானத்தையும் பெற்று பிரஹ்ம வித்யாரூபப் பிரகாசத்தின் சுகத்தை அனுபவித்துக் கொண்டு வீட்டில் வாசஞ்செய்கிற யோகி போற்றத்தக்கவர்

எவர் நான் மேலும் என்னுடையரூபம் என்ற இரண்டு கட்டுப்பாடுள்ள எண்ணங்களை விட்டு விட்டு மான அவமானத்தை ஒன்றாகக்கருதி சமபாவத்துடன் பிரத்யக்ஷ ஆத்மாவை அறிந்து எல்லாக் கர்மங்களிலும் அபிமானம் இல்லாமல் இருக்கிறாரோ அவரே போற்றத்தக்கவர்.

ஆதித்ய வர்ணம், சுவர்ணம் ஜோதி முதலிய சுருதிகள் பிரஹ்மத்திற்கு ரூபம் சொல்லுகின்றனவே என்றாலோ, பிரஹ்மம் அந்தகாரம் அல்லவென்பதை வெளியிடவந்த சுருதிகளேயன்றி ரூபத்தை வெளியிடவந்த சுருதிகளல்ல

விஸ்வம், விஷ்ணு ரூபாதிகளை சொல்லுகின்றனவே என்றாலோ,

இப்படிப்பட்ட சுருதிவாக்கியங்களும் இவைகளை அனுசரித்தவைகளான ஸ்மிர்தி புராணாதிகளும் விவகார திசையை அனுசரித்து நிற்குண பிரஹ்மோ உபாசனைக்கு அனுகர்களான புருஷர்கள் கடைத்தேரும் பொருட்டு சகுணோபாசனைக்கு யோக்யமான ஈஸ்வராதி ரூபங்களைச் சொல்கின்றன.

அர்சுனன் கேட்டது

ஏ. பகவானே! இவ்வாறே நிரந்தர யுக்தனும் சகார வஸ்து ஒன்றன் சரணமானவனுமாகிய எந்த அதிகாரி நிரந்தரம் சகாரபிரஹ்ம ரூப பரமேஸ்வரனாகிய உன்னை சிந்திக்கிறானோ அங்ஙனமே எந்த விரக்த புருஷன் அக்ஷர அவ்யக்தரூப பிரஹ்ம்மாகிய உன்னை நிரந்தரம் சிந்திக்கின்றானோ அவ்விருவருக்குள் எவன் விசேஷமாய் யோகத்தை யுணர்ந்தவனாவான். ஹே அருச்சுனா!

இந்திரிய கூட்டங்களை நிரோதித்து யாண்டும் சமபுத்தியுடையவர்களாய் சர்வ பூதங்களின் இதயத்தின் பிரீதியுடையவராய் அனுதேசிய அவ்யக்த சர்வவியாபக அசிந்தயா

கூடஸ்தாசல நிலையாகிய நிர்க்குண பிரஹ்மரூப அக்ஷரத்தை இடைவிடாது சிந்திக்கின்ற அதிகாரிகளும், நிர்க்குண பிரஹ்மமாகிய என்னையே அடைகிறார்கள் முதலிய சுலோகங்களில் காணலாம்.

இப்படிப்பட்ட நிர்க்குணோ உபாசனை சாதாரணமானவர்களுக்கு அசாத்தியமானதால் அவர்களின் பொருட்டு பக்தி, விசுவாசம், பிரபஞ்சத்தின் விரக்தி, சத்தியம், நம்பிக்கை முதலியவைகளை உண்டாக்கி, அதனால் சித்தசுத்தியைக் கிரம கிரமமாக அடைவிக்க சகுணோபாசனையை சுருதிகள் விதித்திருக்கின்றன.

சகுணோபாசனையில் தேர்ச்சியடைந்தவன் நிர்க்குணோபாசனைக்கு யோக்கியனாகிறான். இது எப்படி என்றால் பூமியை உழுது பயிரிடுபவனுக்கும் நல்ல படிப்பாளியாய் உத்யோகத்தில் முயர்ச்சியுடையவனுக்கும் தன் முயற்சியினால் அடைய வேண்டிய முக்கியமான உத்தேசம் பணமேயல்லவா? பயிரிடுபவன் தானியாதிகளை அடைந்தபிறகு அந்த தானியாதிமூலமாய் பணத்தை அடைகிறான். இதற்கு காலதாமதமும் அதிக சிரமமும் உண்டாகிறது.

உத்தியோகம் செய்பவன் அந்த பணத்தை அதிசீக்கிரமாயடைகிறான். பயிரிடுபவன் உத்யோகத்தை இச்சித்தால்

அதற்கு தகுந்த படிப்பு முதலியவைகளை சம்பாதிக்க வெகு காலம் பழக்கம் வேண்டும். உத்தியோகத்தை முயற்சி செய்யும் பொருட்டு பயிர்த்தொழிலை மட்டும் விட்டு விடுவர்ளுகில் தான்செய்த பயிர்த்தொழிலும் போய் உத்தியோகமும் சித்திக்காமல் இரண்டும் கெட்டவனுவான். ஆகையால் ஒவ்வொருவரும் தன்னுடைய புத்தி சக்தி முதலியவைகளை நிதானித்துக் கொண்டுதான் எதில் முயற்சி செய்யவேண்டுமோ அதில் தேடவேண்டியதற்காக சுருதியானது பலவித உபாசனைகளை விதித்திருக்கின்றன. மேல் சொல்லபட்ட ஈஸ்வராதிகளைப்போல ரூபமில்லாத பிரஹ்மத்தை அறிவதும் அறிந்தபடி நிஷ்டை செய்வதும் எப்படிக் கூடுமென்ருலோ பிரஹ்மஞானமானது பிரஹ்மத்தினுடைய ஆகார ரூபங்களை அறிவதல்ல. பிரஹ்ம சொரூபத்தை அறிவதே.

ஆகாரம் என்ருல் உயரம் குட்டை முதலியன. ரூபம் என்ருல் கருப்பு சிவப்பு முதலியன. சொரூபம் என்ருல் அகண்டாகாரமாய் மாறுதலின்றி ஒரேவிதமாய்எப்போதுமிருக்கிறது. ஆகார ரூபம் இவைகள் மாறுதல் அடையப்பட்டவைகள். சொரூபம் மாருத் தன்மையே.

அது எப்படி என்ருல்,

ஜலத்தின் ஆகாரமானது இடத்துக்குத்தக்கபடி பெரியதாயும் சிறியதாயும் காணும். அப்படியே சேர்க்கைக்கு

தகுந்தபடி சிவப்பு வெளுப்பு முதலிய ரூபங்களையும் அடைந்ததாக காணப்படும் ஆனபோதிலும் ஜல சொரூபம் மாற மாட்டாது அந்த இடம் சேர்க்கை முதலிய உபாதியை நீக்கிப்பார்த்தால் ஜல சொரூபத்தில் மாறுதலே இருக்க மாட்டாது அப்படிப்போல பிரஹ்ம சொரூபம் மாறுத சொரூபமே அந்த சொரூபம். ஏனென்றால் நிர்மலத்வம் சூக்ஷ்மத்வம், ஞானம், ஆனந்தம் முதலியவைகளே. அப்படிப்பட்ட பிரஹ்ம சொரூப ஞானத்தைக் குரு உபதேசத்தினால் அடைந்து உபதேசித்தபடி இடைவிடாமல் தியானம் செய்வதுதான் பிரஹ்ம நிஷ்டை என்று சொல்லப்படுகிறது மாபெரும் துறவிகள், முனிவர்கள், யோகிகள், ரிஷிகள், மகா தபசிகள், தீர்க்க தரிசிகள், ஆச்சாரியர்கள் முதலியவர்கள் அனுபவித்த அனுசாரம்போல் அனுபூதி சிரோன்மணிகள் ஸ்ரீ வசக்குனிமுனி குமாரத்தி பால கார்க்கி ஜனக சபையில் அந்தர்யாமி பிரமாணம் விஷயம் பேசி வேதாந்தத்தில் உபநிஷத்தின் கடவல்லி, சுவேதா சுவேதரம் முதலியதுகளை எடுத்துரைத்து அருளினர். துறவி அம்மையார்கள் பாலகார்க்கி, மைத்ரேயி முதலியவர்களும் அக்கம்மா, ஔவைபிராட்டி முதலியவர்களும் ஞானத்தைப் போதித்தார்கள். முமுக்ஷுக்கள், மோக்ஷத்திற்கு இச்சையுள்ளவர்கள் கடைத்தேறும் பொருட்டு உபநிஷத்தின் சாரங்களை அருளினர்கள்.

## வராகோப நிஷத்.

நன்குறுவார் தம்பால் நட்பை நாடன்மைத் திரியாம்
—மிக்கத்
துன்புறுவார் தம்பாலன்னார் துயர்க்கிரங்கன் கருணை
யாகும
இன்புறுவார் தம்மைநோக்கி இன் புறுதன் முதிதை
—பாவலன்
கனர்பால் வேட்கை கோபமரு விடாமையுபேக்ஷை
யாகும்.

மைத்திரியே முதலா நான்கு மருவிடும்
நல்லுள்ளத் தென்றுந் தொத்துறு
மற்சர மேயிஞ்சை துயர் தருதீப் பொருமை
யாதி பித்துறு தாக்குணங்கள் நீங்கிப்
பெரிய பொருளிலக்கா நிற்கும்
முத்தரிட மியற்கையாக

## ரிபு கீதை

நான்கு மகா வாக்கியார்த்தம் உரைக்கும் சிவன்
முதலியோர் வணக்கம்.

எண் சீர்க்கழி நெடில் ஆசிரிய விருத்தம்

அகில சகன்னயக யநந்த சத்தி
யமைவுற்ற வகண்ட சிவன் சரணம் போற்றி
நிகில சகன் மாதாவாய். நித்யாநந்த
நிச வடிவா மம்பிகையின் சரணம் போற்றி.

சகலவித விக்கின முந்தீர்த் தெல்லோர்க்குஞ்
சாதகமாம் விநாயகனற் சரணம் போற்றி,
தகைமை மிகுமன்பர்க்கு சிவஞானத்தைத்,
தந்தருளுஞ் சண்முகனற் சரணம் போற்றி,

## நூல்

சருவவித வுலகத்துஞ் சார்வதற்குச் சாலவுமே
யரிதாகிக் குய்யமாகிச் சுருதி முடியனைத்திலும்
நற்சாரமாகிச் - சுத்தமதாம் பரப்ரஹ்ம
சொரூபந்தன்னை - யிருளறவே நேரக வறிவிக்கிற
வியல்புள்ள நான்கு மகா வாக்கியத்தின்
பொருளினை யிங்கெலோர்க்கு மிதமேயாகப்
பூன்றசிவன் புகன்றபடி புகலுவாமே (1)

பெருமைமிகு மிருக்மறை முடியிலுள்ள
பிரஞ்ஞானம் பிரஹ்மமெனும் வாக்கிய மொன்று
மிருண்மருவா யெசுர் வேத முடியிலுள்ள
விலகுமகம் பிரஹ்மாஸ்மி வாக்கிய மொன்று,
மருண் மருவா சாமமறை முடியிலுள்ள
மகத்தான தத்வமசி வாக்கியமொன்று
மரியவதர்வண வேதமுடியிலுள்ள
வயமான்மா பிரஹ்மமெனும் வாக்கிய மொன்றும்(2)

இந்தவித நான்குமறை முடியின் கண்ணே
யிருக்கின்ற நான்கு மகா வாக்கியத்துண்
முந்தியதாம் பிரஞ்ஞானம் பிரஹ்ம மென்றே
மொழிந்தமகா வாக்கினுடையப்பொருளைச்சொல்வாய்
மைந்தவிதிற் பிரஞ்ஞானம் பிரஹ்மமென்று
மருவு பதமிரண்டாகு மற்றிவற்றின
முந்தியதாம் பிரஞ்ஞான பதத்தினுக்கு, முக்கியமா
மர்த்தத்தை மொழியகேளாய், (3)

ஞானமதே பிரஞ்ஞான மென்னலாகும்
ஞானத்தாற் சகலமுமே தெரிவதாகும்
ஞானமதிற் றெரிகின்ற சகத்தனைத்தும்
ஞானத்திற் கற்பிதமாய்த் தெரிவதாலே
ஞானமலதன்னியமா யொன்றுமில்லை
ஞாலமுதலெப் பொருளும் ஞானமாத்ரம்
ஞானமதே நமது நிசவடிவ மாகும்
ஞானமதே பரப்பிரஹ்மவடிவமாமே (4)

சருவசகததிட்டானசொரூபமான — சத்தியஞானனந்த வத்துதானே. பிரஹ்மமென்னும் பதத்தினுடையர்த்த மாகும்
பிரஹ்ம மதிற்கற்புதமாய்த் தோன்றி நின்ற ஒரு பொருளும்

பிரஹ்மத்திற்கயலேயாகா. துணர்வுற்ற பொரு
ளெல்லாம்
பிரஹ்மமாத்ரம். பிரஹ்மமே நமது நிஜசொரூப
மாகும்
பிரஹ்மமதே பிரஞ்ஞான சொரூபமாமே. (5)

பிரஞ்ஞானப் பொருள் தானே பிரஹ்மமாகும்
பிரஹ்மமெனும் பொருள் தானே பிரஞ்ஞானகாண்
அஞ்ஞான முதலியதா முபாதியாலே,
யகண்டபரம் பொருள்தானே யிரண்டு போலாம்
பிரஞ்ஞானம் பிரஹ்மமெனும் வாக்கியார்த்தம்
பிறங்கியதா லுபாதியெலா நீங்கும்போது
விஞ்ஞானகனமாவத்துவொன்றே
வேறற்றவ்கண்டார்த்தமாகி நிற்கும் (6)

பிரிவுற்றவுபாதியுது சீவன் தானே
பிரஞ்ஞான பதத்தினுடைய வாச்சியார்த்தம்
விரிவுற்றவுபாதியுறு மீசன்றானே
விளம்பியிடும் பிரமபத வாச்சியார்த்தம்
ஒருமித்த நிருபாதி வத்துதானே
யுபயவிதபதத்திற்குமிலட்சியார்த்தம்
தெரிவித்தவுபயபத லட்சியைக்ய
திகழுமகா வாக்கினுடையகண்டார்த் தங்காண் (7)

அறைந்தபடி மகாவாக்கி னகண்டார்த்தத்தை
யறிந்துமன தம்மயமா யிதரமெல்லா
மறந்துதன தாவரண மனைத்து நீங்கி
மயக்கமற நிற்பதுவே யகண்டாகாரஞ்
செறிந்தமனே விருத்தியெனச் செப்பலாகுஞ்
செப்புமகண்டாகார விருத்திதானே
யறிந்தவரா லதிசுகமாஞ் சீவன்முத்தி
யாகுமென வங்கங்கே யறைப்லாமால் (8)

சத்திய சிற்சுக கனமாய்ச் சாந்தமாகிச்
சலனமிலாச் சாசுவத சுபாவமாகி
நித்திய நிர்க்குணமாகி நிருவிகற்ப
நிரவயவ நிரஞ்சனமாய் நிறைந்து நின்ற
வத்துவித பரப்ரஹ்ம மானே னென்ன
றறிவுற் றம் மயமான விருத்திதானே
சுத்த வகண்டாகார விருத்தியென்று
சூட்சமுணர் ஞானிகளாற் சொல்லாகும் (9)

சந்ததநான் பரப்ரஹம சொரூபமன்றிச்
சற்றேனுஞ் சம்சாரி யானேனென்றென்
றிந்தவிதமறிவுற்றுச்சலத்தின் சேர்ந்தங்
கேகரசமாகின்சலவணமேபோ

லங்தமிலாவகண்ட பரப்பிரஹ்மத்தின்க
ணைக்கியமேயடைந்த மனோவிருத்திதானே
ழைந்தவகண்டகார விருத்தியென்று
மாசற்ற ஞானிகளான் மதிக்கலாகும். (10)

சொன்னவகண்டாகார விருத்திதானே
சுகமேலாயிருக்கின்ற சீவன்முத்தி
பின்னையகண்டாகாரவிருத்தி நீங்கிப்
பிராரத்தப்யவையுமே நீங்குங்காலை
யனனியமாமுபாதிகளோ ரணுவுமின்றி
யகண்டேகரசமானவத்துவாக
மன்னியிருக்கின்ற நிலை விதேகமுத்தி
மற்றுமகண்டேகரச நிலைமைகேளாய் (11)

ஓதியிடும் பிரஞ்ஞான பதமுந்தள்ளி
வுரைசெய்த பிரஹ்மமெனும் பதமுந்தள்ளி
பேதமிலாப்பர பிரஹ்மநானேயென்று
பிரியமுடன் பழகியபானை யுந்தள்ளி
யேதைதமே நினையாமல் வெறிதிருந்திங்
கிவ்விதமாயிருப்பதெனு நினைவுந்தள்ளி
யீதெனவேயுணரவொண விருப்புத்தானே
யென்றுமகண்டேகரச நிலைமையாமே (12)

மனதுடைய விகற்பங்களனைத்துமின்றி
மாயைமுதலுபாதிகளோ ரணுவுமின்றி
யனியமிலாவகண்டே காரசொரூப
மாகியிருக்கின்ற நிலைவிதேகமுத்தி
சொனநிலைதான் சுபாபமதாய்க்கிட்டு மட்டுஞ்
சுழல்கின்ற விவ்விகாரமனைத்துந்தள்ளி
யனகவகண்டா காரவிருத்திதன்னை
யலப்பறவே யனவரத் மப்யாசிப்பாய் (13)

புகலுமகண்டா காரவிருத்திதன்னைப்
புரையாவே பழகியிடுமியல் பைக்கேளாய்
அகிலமுமேயகண்ட பாப்பிரஹ்மமென்று
மதுதானே நானென்று நானதென்று
மகிழ்வற்வே யெப்போது மிடைவிடாமல்
ஏகபர பாவனையேயிதயத்தின்கண்
விகலமறச்செய்வதுமேய கண்டாகார
விருத்திதனைப்பழகியிடுமியல்பாமைந்தா (14)

தேகமுதனென்னலறு விதவிருத்தி
திகழ்சாட்சி நானெனல்சாட்சி விருத்தி
யேகபரநானென்னலகண்ட விருத்தி
யிம்மூன்று விருத்திகளி லிரண்டைத்தள்ளி

யாருமகண்டாகார விருத்திதன்னை
யநவரத மாதரவா யப்யாசித்துச்
சோகமுறுஞ்சித்த விகற்பங் டீர்ந்துச்
சொன்னவகண்டேகரச சொருபமாவாய் (15)

இன்னவிதம் பிரஞ்ஞானம் பிரஹ்மமென்னு
மிலகும்கா வாங்கினுடையருத்தஞ் சொன்னே
முன்னியதாயிங்குரை செய்நீதியெல்லா
மூன்றுமகா வாக்கினுமே தெரிந்துகொள்வாய்
பின்னையகம் பிரஹ்மாஸ்மி யென்பதாகப்
பேசும்காவாக்கினுடைப் பொருளைகேளா
யன்னவகம் பிரஹ்மாஸ்மி வாக்கியத்தி
லகம் பிரஹ்மாஸ்மி யெனப்பதமூன்றுமே. (16)

முந்துமகம் பதத்துக்குச் சீவனர்த்தம்
மொழி பிரஹ்மபதத்துக் கவ்விசனர்த்த
மந்தமிலாச்சீவ பரவயிக்கியந்தானே
யஸ்மியெனும் பதத்தினுடையருத்தமாகு
மிந்தவித மிந்த மகா வாக்கியத்தி
னேகரச மாகியுளவகண்டார்த்தத்தைப்
புந்தியினாலாய்ந்திதனையனுபவித்துப்
புகன்றவகண்டேகரச சொரூபமாவாய் (17)

பேதமுறமுபாதியினாற் கிஞ்சிஞ் ஞத்வம்
பிறங்கிய சர்வஞ்ஞத்வ மாதியாவு
மோதிய சீவேசருடைத் தன்மம்போலா
முபாதியெலாம் விசாரித்துத் தள்ளுங்காலை
யாதியிலாச் சீவபர வைக்யமிஞ்சு
மதுதானே யகண்டார்த்த மாமவற்றை
யோதுமகம் பிரஹ்மாஸ்மி வாக்கியத்தா
லுணர்ந்தந்த வகண்டார்த்த வடிவேயாவாய் (18)

அனகவகம் பிரஹ்மாஸ்மி வாக்கியார்த்த
மாசிரியனருளிய வாற்றிந்தபோது
பினையுமதையுத்தியுடன் மனன்ஞ்செய்து
பிராந்திதரின் சங்கையெலாம் பெயர்க்கவேண்டும்
சொனவிதமாய்ச் சங்கையெலாம் பெயர்ந்தபின்னர்ச்
சுழல்கின்ற விபரீதமனைத்துந்தீர
வனிசமகம் பிரஹ்மாஸ்மியென்பதாக
வாதரவோடப்பியாசஞ் செய்யவேண்டும் (19)

சத்தியசிற்சுககனமாம் பிரஹ்மநானே
சாலவுபசாந்தபரப் பிரஹ்மநானே
நித்தியநிர்க்குணமான பிரஹ்மநானே
நிரவயவ நிரஞ்சனமாம் பிரஹ்மநானே
யத்துவிதமான பரப்பிரஹ்மநானே
யகண்டமதாம் பரபிரஹ்மநானேயென்று
சத்துருவாம விபரீதந் தீருமட்டுஞ்
சந்ததமுஞ்சலியாமற் பழகவேண்டும் (20)

அகில பரிபூரணமாம் பிரஹ்மம் நானே
யான்மாவுக் கபின்ன பரபரஹ்மம் நானே
சகலமுமாய்த் தெரிகின்ற ப்ரஹ்மம் நானே
சட்பாவ விகாரமிலாப் பிரஹ்மம் நானே
துகளணுவு மருவாத பிரஹ்மம் நானே
துவிதமிலாச் சுத்த பரப்ரஹ்மம் நானே
றகமருவு விபரீதந் தீருமட்டு
மநவரத மாதரவாய்ப் பழகவேண்டும். 21

இந்தவிதம் விசாரித்த விவேகியெல்லா
மேகபர பாவனையே யிடைவிடாமற்
சந்ததமுஞ் செய்ததனல் விபரீதத்தைச்
சற்றேனு மிஞ்சாது நாசஞ் செய்தே
யந்தவகம் பிரஹ்மாஸ்மி வாக்கியார்த்த
மான வகண்டார்த்தத்தி னனுபவத்தைப்
புந்திதனிற் பிரதி பந்த மொன்று மின்றிப்
பூரணமா யெப்போதும் பொருந்தவேண்டும். 22

பல்விதமாம் வாதனையுந் தூரத் தள்ளிப்
பகர்ந்தபடி யகண்டார்த்த மனுபவிப்பா
யிலகுமகம் பிரஹ்மாஸ்மி வாக்கியார்த்த
மிவ்விதமா யிசைப்புற்றோ யினியுனக்குத்

திலகமதாந் தத்வம சிவாக்கியார்த்தந்
திடமாகச் சித்தமிசைத் தெரியச் சொல்வாய்
தலைமையதாய்த் தயங்கிய வில் வாக்கியத்திற்
றத்வமசி யென மூன்று பதங்களாமே. 23

மாயையெனு முபாதியுறு மீசன்றனே
மருவியதற் பதமுறை செய் வாச்சியார்த்த
மாயதன வித்தையுறுஞ் சீவன்றனே
யறைகின்ற துவம் பதமோர் வாச்சியார்த்த
மேயமதா முபாதியெலா மிழந்த பின்ன
ரேகவிசி கணமான வத்துத்தானே
தூயபத மிரண்டுக்கு மிலட்சி யார்த்தந்
தொடர்புற்ற வைக்கியமே யசி பதார்த்தம் 24

சொல்லிய வில் வைக்கியமா மகண்டார்த்தத்தைச்
சுத்தமதாந் தத்வமசி வாக்கியத்தாற்
கல்லெனவே திடமாக வறிந்தெப்போதுங்
கலங்காம லகண்டேக ரசமே யாவா
யெல்லையிலா வகண்ட வடிவாகுமட்டு
மிதாமுணர் விருத்தியெலாந் தூரத்தள்ளிப்
புல்லு மகண்டாகார விருத்தி தன்னைப்
புரையறவே பழகியதாற் பூன்றனுவாய். 25

தற்பத லட்சியமான ப்ரஹ்ம ரூபந்
துவம்பத லட்சியமான நீயே யாவாய்
அற்பமுமே யிதிலை யமமைவதில்லை
யகண்ட சிவன் றன்னை யறைந்த துண்மை
சொற்பமிலா வகண்ட பரிபூர்ணமான
சுத்தமதாம் பரப்ரஹ்ம நீயேயென்று
செப்பியிடுங் குருபரனே குருவாகின்றான்
செப்பியவா றறிந்தவனே சீடனானோன் 26

சத்திய சிற் சுககனமாம் ப்ரஹ்மம் நீயே
சகல பரிபூரணமாம் ப்ரஹ்மம் நீயே
நித்ய நிட்களமான ப்ரஹ்மம் நீயே
நிரந்தரமாய் நிறைந்த பரப்ரஹ்மம் நீயே
யத்துவிதமான பரப்ரஹ்ம நீயென்
றையமற உபதேசஞ் செய்கின்றானே
யத்தமனுங் குருவாவன் மற்றோரெல்லா
மொருகாலு முயர்வுற்ற குரவராகார் 27

அலைவற்ற வறிவான ப்ரஹ்மம் நீயே
யகண்டைக ரசமான ப்ரஹ்மம் நீயே
நிலைபெற்ற நிச்சலமாம் ப்ரஹ்மம் நீயே
நிராவரணமான பரப்ரஹ்மம் நீயே

சலனமற்ற சாந்த பரப்ரஹ்மம் நீயே
சதானந்த கனமான ப்ரஹ்மம் நீயென்
றுலைவற்ற வுபதேசஞ் செய்கின்றேனே
உத்தமனாங் குருவாவன் பற்றோராகார் 28

ஆதலினாற் பரப்ரஹ்மம நீயேயென்றிங்
கருள்பவனே யாசிரிய னெனவே வோர்ந்து
சாதகமாஞ் சற்குருவி னுபதேசத்தைச்
சத்தியமா நம்பியதைச் சாதிப்போனே
பேதமிலா வகண்ட பரப்ரஹ்ம ஞானம்
பெற்றதனாற் பவபந்த மனைத்துந் தீர்ந்து
போதகன மானபர வடிவே யாவன்
புகன்றதிலோ ரணுவேனு மையமில்லை. 29

உச்சமதாங் குருவருளு மகண்டார்த்தத்தை
யுவகையுட னுள்ளபடி கேட்ட பின்னர்
நிச்சலமாம் புத்தியினா னிச்சயித்து
நிருமலமா யகம் ப்ரஹ்ம மானேனென்றே
துச்சமிலா வநுபூதி யடைந்தவன் றான்
றுகளற்ற சற்சீடன் மற்றோரெல்லா
மெச்செயலைச் செய்யினுமே சீடராகா
ரேக பரமறிந்த சீடனாவன். 30

சர்வமகா மந்திரமு முபதேசிப்போர்
சர்மாண்யக் குரவரென்ச் சாற்றலாரு
மிருமையிலா பரப்ரஹ்ம நீயே யென்றிங்
கிணையற்ற வுபதேசஞ் செய்கின்றோனே
பெருமை மிகுஞ் சற்குருவென் றுரைக்கலாகும்
பின் வெகுவாய்ப் பேசுவதாற் பெறும்பேறென்ன
வரியபர நீயென்போ ஞசாஞ்ஞே
னகம் ப்ரஹ்மமென வறிவோன் மாஞ்ஞஞ்ஞேன் 31

அகிலமறை முடிவுக்கு மகண்டமான
வத்துவித பரப்ரஹ்ம சொரூபந் தானே
தகைமைமிகுந் தாற்பரியப் பொருளா மென்றுந்
தற்ப்ரஹ்ம நீ யென்று முபதேசித்த
மகிமை மிகுஞ் சற்குருவின் வாக்கியத்தான்
மகத்தான பரம்பொருளைக் கேட்டுள்ளத்தில்
விகலமற வறிவதுவே சிரவணங் காண்
வேறொன்றுஞ் சிரவணமே யன்றுமைந்தா 32

அருள்வடிவா மாசிரிய னருளிச் செய்த
வகிலமகா வாக்கினுடை யகண்டார்த்தத்தை
மருளறவே கேட்டுணர்தல் சிரவணங்காண்
மற்றதெலாஞ் சிரவணமே யாகாதென்றுஞ்

சிரவணமே செயலுற்ற பொருளை மீண்டும்
சிரத்தையுடன் யுத்தியினாற் சிந்தை செய்தல்
பிரமையெலாந் தீர்க்கின்ற மனனமாகும்
பேசியவிம் மனனத்தின் யுத்தி சொல்வாம். 33

கனவினிடை நனவில்லை யிவ்விரண்டுங்
காரணமாஞ் சுழுத்திதனி லில்லையந்த
நனவுகனாச் சுழுத்திகளுந் துரியத்தில்லை
நாலுவித வவத்தைகளுஞ் சுத்தத்தில்லை
சொன்னவிதமா யவத்தையெலா மிலாததாலுஞ்
சுத்தமதாஞ் சின்மாத்ர சொரூபமொன்றே
யநவரத மழியாம லிருப்பதாலு
மத்துவித சின்மாத்ர சொரூபமே நான் 34

தேகமுற் சடமான விவையனைத்துந்
திரிசியமாய்க் கடமெனவே நசிப்பதாலும்
ஏகபர சின்மாத்ர வடிவா மான்மா
வெப்போதுந் திருக்குருவா யிருப்பதாலும்
பாகமுறுந் தேகாதி மித்தையாகும்
பகுப்பற்ற வான்மாவே யுண்மையாகு
மாகையினாற் றேகாதித் திரளனல்ல
வருளுத வறிவான வான்மாவே நான். 35

சத்திய ஞானனந்த சுபாவமான்
சகல வதிட்டான பரப்ரஹ்மத்தின்கட்
சித்திரவ் நிருதச்ட துக்கிமான்
செகத்தெல்லாங் கற்புதமாய்த் தோற்றலாலே
யத்துவித செகத்தெல்லா மாயுங்காலை
யிலகுமதிட்டான பரப்ரஹ்மம் மேயாஞ்
சுத்திகையிற் கற்புதமாய்த் தேற்றும் வெள்ளி
சோதிக்கி லதிட்டான சுத்திதானே. 36

பேசியவிப் புத்தியுடை விருத்திதானே
பிறங்கு மகண்டாகார விருத்தியாகு
மாசற விவ்விருத்தியினிற் பிரதிபிம்பிக்கு
மறிவுருவே யகண்டபர சாட்சாத்கார
நேசமோடிவ் வகண்டபர சாட்சாத்கார
நிட்டையினைப் பெற்றவரே முத்தராவர்
ஈசனுடை யுபய திருப் பதந் தன்னை
யியம்பியதி லெள்ளளவு மையமில்லை. 37

சுயமதுவாந் தத்வமசி யென்னும் வாக்கியம்
சொல்லு முபதேச மகா வாக்யமாகு
மியனுமகம் ப்ரஹ்மாஸ்மி யென்னும் வாக்ய
மிலதுமந்பூதி மகா வாக்யமாகு

மயன் மருவாப் பிரஞ்ஞானம் பிரஹ்ம வாக்யம்
மனனத்தி னப்பியாச வாக்கியமாகு
மயமான மாப்ரஹ்மமென வுறையும் வாக்ய
மவைக்கெலா சம்மதமாம் வாக்யமாமே. 38

அனிசமகம் பிரஹ்மாஸ்மி வாக்கியத்தா
லகண்டபர பாவனையே யப்பியாசித்து
நனிமருவும் பாவனையா னாமரூப
நாட்டமெலாம் நன்றாக நாசஞ் செய்து
துனிமருவுந் துவிதத்தின் றொடர்பே யன்றித்
துகளற்ற வகண்டார்த்த மனுபவித்தவ்
வனியமிலா வகண்டார்த்த வடிவே யாவா
யவ்வண்ண மாகுவதே யகண்ட மோட்சம் 39

அகில சகந்நாயகனும் பரேசன் றன்னை
யனவரத மாதரவா யாராதித்து
மிகவுமருட் பெற்றவரே மனதின் சுத்தி
மேவினராய் விளம்பு மகா வாக்கியத்தின்
றருபொருளைத் தடையறவே யனுபவித்துத்
தன்மயமே யாவரென நிதாகனுக்கு
நிகழ் வுறவே ரிபுமுனிவன் கருணையாலே
நிகில மகா வாக்குகளின் பொருளுஞ் சொன்னான் 40

வத்துநிர்ணய சாதகமா மகா வாக்கியங்களினாற் பரசீவரின்
சுத்தமாயுள வைக்கிய மறிந்தவர் சூழும்பிப்பவ லேச
மிலாமலே
நித்தியா நந்தவத்துவ தாகவே நிற்பரென்றுரமா விங்கு
பேசுதல்
சத்தியானந்தத் தாண்டவ மாடுநஞ் சாம்பமூர்த்தியின்
பூரண ரூபமே

நான்கு மகா வாக்கியார்த்தம்
சம்பூரணம்.

யத்துவித பூரணமாங் குருவே போற்றி
யகண்டமதாஞ் சற்குருவே போற்றி போற்றி.

---

## குரு வணக்கம்.

வேத நான்கினுட் பொருளினை மறைத்தவெந் தமக்குப்
போத பாறுவாய்ப் புனிதநல் லருளுருப் புனைந்து
சேதுவாம் பர சுகத்தினைத் திகழ்தர விளங்கும்
வாதராயணன் மலரடி முடிமிசை வைப்பாம்.

பொங்கருண் ஞானங்கள் புண்ணிய மனைத்து மொன்றாய்
அங்குருபுல் லென்ன வந்தாண் டருமறைப் பொருளை
யார்க்கும்

அங்கையி னெல்லிபோல வளித்தருள மலானந்த
சங்கர பகவற் பாதன் றுண்மலர் நந்தலைக்கே.

## ஜனகராஜன் அனுபவத்தைக் கூறி இவ்வனுபவம் வருவது ஆத்ம விசாரத்தாலன்றி ஏனையவற்ருல் கூடாது எனல்.

பேசிய தன் விசாரத்தாற் சனகர் பிரான் பெரும் பேறு
பெற்றதல்லா
வாசியுள மற்றொன்றால் வந்ததல்ல வாரீச மலர்க்கண் மாலே
யாசிலதாய்ச் செவ்வியதாய்த் தனதான விசாரத்தா
லடைவதல்லாற்
றேசிக ரில்லாவீனர் செய்தொழிலார் பெறலாமோ.

## சிற்சொருபம்.

நிட்காம கன்மம் வேண்டுமெனல் அக்கன்மத்தின்
பலனைக் கூறல்,

இலங்கிய சிந்தாமணி யாமிதயமெனுஞ் சர்க்கரையிலிருக்
கும் போதந்
கலங்கலிலா விவேகியர்க்குக் கருதுபொருள் கற்பகம்போற்
கனத்தி நல்குந்
துலங்கு விசாரம் படைத்துப் பேதமை போய் நல்ல அறிவு
தோன்றிஞரை
விலங்கு கவசத்தோரை யம்புகள்போற் காமாதி விகர்ப்பந்
தாக்கா

## குரு ஸ்துதி.

பாசமனைத்தையும் தனித்தனிப் பரிந்திட நீங்கி
நேசமாகிய வறிவுரு நீயெனக் காட்டிப்
பேசு மேழ்வகைப் பிறப்புனக் கிலையெனப் பேசித்
தூசு நீக்கிய சுயஞ்சிதா காசனைத் தொழுவாம்.

ஓம் தத்ஸத்.

சர்வஞ் சின்மயம்.



ஜெயராம் பிரஸ், இராஜபாளையம்.

